AL/2015/42/T-I





**இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்**
**Department of Examinations, Sri Lanka**

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

| | | |
|---|---|---|
| හින්දු ධර්මය I<br>**இந்து சமயம் I**<br>Hinduism I | **42 T I** | පැය දෙකයි<br>**இரண்டு மணித்தியாலம்**<br>*Two hours* |

**அறிவுறுத்தல்கள்:**

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை எழுதுக.**

※ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

※ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

● **01** தொடக்கம் **05** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** விடயங்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** ஏதோவொரு காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது.** பொருந்தாததைத் தெரிவுசெய்க.

**1.** (1) மெய் (2) வாய் (3) தலை (4) கண் (5) மூக்கு

**2.** (1) திருமூலர் (2) திருநாவுக்கரசர் (3) சாக்கியர் (4) எறிபத்தர் (5) அருணகிரிநாதர்

**3.** (1) வேதங்கள் (2) பிராமணங்கள் (3) புராண இதிகாசங்கள்
(4) ஆரணியங்கள் (5) உபநிடதங்கள்

**4.** (1) நாச்சியார் திருமொழி (2) பெருமாள் திருமொழி (3) பெரிய திருமொழி
(4) வேதாந்த சங்கிரகம் (5) திருவாய் மொழி

**5.** (1) கொத்தித் தெய்வம் (2) பெரிய தம்பிரான் (3) முத்துமாரி அம்மன்
(4) பேச்சி அம்மன் (5) திரௌபதை அம்மன்

● **06** தொடக்கம் **10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** சோடிச் சொற்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ளவை ஒன்றுடன் ஒன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடிச் சொல்லைத் தெரிவுசெய்க.

**6.**
(1) மாமாங்கம் - முருகன் கோயில்
(2) பருத்தித்துறை - பசுபதீஸ்வரர் கோயில்
(3) யாழ். பல்கலைக்கழகம் - பரமேஸ்வரன் கோயில்
(4) நல்லூர் - கைலாசநாதர் கோயில்
(5) கீரிமலை - நகுலேஸ்வரர் கோயில்



**7.**
(1) மாணிக்கவாசகர் - திருக்கோவையார்
(2) நாவலர் - நாவலன் கோவை
(3) உமாபதி சிவாச்சாரியார் - கோயிற்புராணம்
(4) குமரகுருபரர் - சிதம்பரம் மும்மணிக்கோவை
(5) சபாபதி நாவலர் - சிதம்பரபுராணம்

**8.**
(1) வீரபத்திரர் விரதம் - சித்திரைத்திங்கள் பரணிநாள்
(2) சக்தி விரதம் - ஐப்பசித்திங்கள் உத்தரநாள்
(3) சிவராத்திரி விரதம் - மாசித்திங்கள் வளர்பிறைச் சதுர்த்தி
(4) விநாயகர்சட்டி - கார்த்திகைத்திங்கள் தேய்பிறை பிரதமை
(5) கந்தசட்டி - ஐப்பசித்திங்கள் வளர்பிறை பிரதமை

**9.**
(1) சரசோதிமாலை - போசராச பண்டிதர்
(2) இரகுவம்சம் - வித்துவ சிரோமணி ந.ச. பொன்னம்பலபிள்ளை
(3) கதிரைவேலன் கோவை - நல்லூர் சின்னத்தம்பிப் புலவர்
(4) யாழ்ப்பாண வைபவமாலை - மயில்வாகனப் புலவர்
(5) பிள்ளையார் புராணம் - புலோலி வைத்திலிங்க தேசிகர்

[பக். 2 ஐப் பார்க்க

10. (1) சங்கரர் - கேவாலத்துவைதம்
(2) இராமானுஜர் - விசிட்டாத்துவைதம்
(3) மத்துவர் - துவைதம்
(4) வீரசைவர் - சக்தி விசிட்டாத்துவைதம்
(5) மெய்கண்டார் - சிவசமவாதம்

● 11 தொடக்கம் 15 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் 'அ', 'ஆ' என்னும் நிரல்களின் கீழ் சில விடயங்கள் தரப்பட்டுள்ளன. 'அ' நிரலுக்கு ஏற்ற விதத்தில் 'ஆ' நிரல் பொருத்தமாக ஒழுங்குபடுத்தப்பட்டுள்ள சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

11.

| அ | ஆ |
|---|---|
| (i) கோயில் நிறுவனங்களை நிர்வகிப்போர் | A - திருப்பதிகக் காணி |
| (ii) கோயில் பொக்கிஷம் | B - மாகேசுவரர் |
| (iii) கோயில் கணக்குப் புத்தகம் | C - சூலக்குறி |
| (iv) கோயிலின் உரிமையை நிலைநாட்ட அடையாளமாக அமைவது | D - ஸ்ரீ பண்டாரம் |
| (v) ஓதுவார்க்கு வழங்கப்படும் காணி | E - ஸ்ரீ பண்டாரப் பொத்தகம் |



(1) ADECB (2) BDECA (3) CEDAB (4) DABEC (5) EDABC

12.

| அ | ஆ |
|---|---|
| (i) வைதிகம் | A - பகவானுக்கு மங்களம் ஏற்பட வேண்டுமென்று போற்றும் பாடல் |
| (ii) ஆறெழுத்து மந்திரம் | B - தேவமரபு |
| (iii) மங்களாசனம் | C - பூசையின்போது மாலை சாத்துதல் |
| (iv) புஷ்பதானம் | D - கோயிலுக்குத் தொண்டு செய்யும் மாதர்கள் |
| (v) தேவரடியார் | E - ஓம் சிவாயநம |

(1) ADBCE (2) BEACD (3) CABED (4) DBACE (5) EABCD

13.

| அ | ஆ |
|---|---|
| (i) சைவசித்தாந்தம் | A - சிதறுதேங்காய் |
| (ii) வைப்புத்தலங்கள் | B - நூலாசிரியர் தாம் கூற வந்த பொருள் மரபைத் தொகை வகை செய்து வைக்கும் பாங்கு |
| (iii) வைப்பு முறை | C - சென்னை, சைவசித்தாந்தப் பெருமன்ற வெளியீடு |
| (iv) தேவாரநாயகம் | D - உண்டாக்கிய தலங்கள் |
| (v) சூறைத்தேங்காய் | E - தேவாரம் ஓதுவார்க்குத் தலைவன் |

(1) AEBDC (2) BEACD (3) CDBAE (4) CDBEA (5) EDCBA

14.

| அ | ஆ |
|---|---|
| (i) பிரமசொரூபம் | A - வெளிப்படவடிவம் |
| (ii) வியூகம் | B - மேலான வடிவம் |
| (iii) விபவம் | C - வழிபடுவதற்குரிய வடிவம் |
| (iv) அந்தர்யாமி | D - தோன்றி வந்த வடிவம் |
| (v) அர்ச்சாவதாரம் | E - உள்ளுறை வடிவம் |

(1) ADEBC (2) BADEC (3) BEADC (4) CABDE (5) CDAEB

15.

| அ | ஆ |
|---|---|
| (i) திருக்களிற்றுப்படியார் | A - 100 வெண்பாக்கள் கொண்ட சித்தாந்த சார்புநூல் |
| (ii) சிவஞானபோதம் | B - சிவஞானபோதத்தின் சார்புநூல் என்பர். 100 விருத்தப்பாக்களால் ஆனது. |
| (iii) சிவஞானசித்தியார் | C - சித்தாந்த நூல்களில் முதல்நூல். 12 சூத்திரங்களையும் 81 வெண்பாக்களையும் கொண்டது. |
| (iv) சிவப்பிரகாசம் | D - சிவஞானபோதத்தின் வழிநூல். சிவஞானபோதம் கூறும் 12 சூத்திரப் பொருளை 12 அதிகாரத்தால் விளக்குவது. |
| (v) திருவருட்பயன் | E - சிவஞானபோதத்திற்கு முற்பட்ட நூல். 100 வெண்பாக்களைக் கொண்டது. |

(1) AEBCD (2) BACED (3) CDABE (4) DAEBC (5) ECDBA

[பக். 3 ஐப் பார்க்க

- **16** தொடக்கம் **25** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் அதன் கீழே தரப்பட்டுள்ளவற்றுள் மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

**16.** மேல்வருவோருள் காலத்தால் முற்பட்ட ஆழ்வாராகக் கருதப்படுபவர்
(1) பூதத்தாழ்வார் (2) பொய்கையாழ்வார்
(3) பேயாழ்வார் (4) நம்மாழ்வார்
(5) பெரியாழ்வார்

**17.** பத்தொன்பதாம் நூற்றாண்டில் சைவ சமய வளர்ச்சியின் பொருட்டுப் பணியாற்றியோருள் முதன்மையானவர்
(1) ஆறுமுகநாவலர் (2) ராமலிங்க அடிகளார்
(3) காசிவாசி செந்திநாதையர் (4) நா.கதிர்வேற்பிள்ளை
(5) மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை

**18.** சைவசித்தாந்த நூல்களுள் காலத்தால் முற்பட்டதாகக் கருதப்படும் நூல்
(1) சிவஞானபோதம் (2) சிவஞான சித்தியார்
(3) திருக்களிற்றுப்படியார் (4) திருவுந்தியார்
(5) சிவப்பிரகாசம்

**19.** ஆலயத்துள் ஓதப்படும் பஞ்சபுராண வரிசைக் கிரமம் அடங்கியுள்ள தொகுப்பை இனங்காண்க.
(1) தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்புகழ், திருப்பல்லாண்டு
(2) திருவாசகம், தேவாரம், திருப்புகழ், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு
(3) தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம்
(4) தேவாரம், திருப்புகழ், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, திருவாசகம்
(5) தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்புகழ், திருப்பல்லாண்டு

**20.** கோயில் அமைப்பு சரியான வரிசைக் கிரமத்தில் அடங்கியுள்ள தொகுதி எது?
(1) உபபீடம், அதிஷ்டானம், ஸ்தம்பம், பிரஸ்தரம், கர்ணக்கூடு
(2) உபபீடம், அதிஷ்டானம், பிரஸ்தரம், கர்ணக்கூடு, ஸ்தம்பம்
(3) உபபீடம், அதிஷ்டானம், பிரஸ்தரம், ஸ்தம்பம், கர்ணக்கூடு
(4) உபபீடம், அதிஷ்டானம், கர்ணக்கூடு, ஸ்தம்பம், பிரஸ்தரம்
(5) உபபீடம், பிரஸ்தரம், ஸ்தம்பம், அதிஷ்டானம், கர்ணக்கூடு



**21.** தேவாரங்களின் அடிப்படையில் தமிழ்நாட்டில் வழக்கில் இருந்த மூன்று வகைக் கோயில்கள் அடங்கும் தொகுதி
(1) மாடக்கோயில், இளங்கோயில், மணிக்கோயில்
(2) ஈஸ்வரம், சிதம்பரம், கொகுடிக்கோயில்
(3) பெருங்கோயில், மாடக்கோயில், சிதம்பரம்
(4) ஆலக்கோயில், திருவண்ணாமலைக்கோயில், தூங்கானை மாடம்
(5) இளங்கோயில், கைலாசநாதர்கோயில், ஆலக்கோயில்

**22.** வைஷ்ணவ சமயத்தின் முழுமுதற்கடவுளாக விஷ்ணு எடுத்த மூன்று அவதாரங்கள் அடங்கும் தொகுதி
(1) மச்சம், வராகம், விதுரன் (2) கூர்மம், வராகம், பரசுராமன்
(3) நரசிம்மன், கண்ணன், அனிருத்தன் (4) சங்கர்ஷணன், பலராமன், பரசுராமன்
(5) வாமனன், இராமன், விஷ்ணு

**23.** தேவாரமுதலிகள் மூவர் அடங்கும் தொகுதி
(1) திருமூலர், கல்லாடர், அப்பர் (2) ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர், சுந்தரர்
(3) அப்பர், ஞானசம்பந்தர், சுந்தரர் (4) அப்பர், ஞானசம்பந்தர், மாணிக்கவாசகர்
(5) ஞானசம்பந்தர், காரைக்காலம்மையார், சேக்கிழார்

**24.** சைவ சமயத்தின்படி கட்டாயமாக தவிர்க்கப்படவேண்டிய மூன்று கருமங்கள் அடங்கும் தொகுதி
(1) சிவநிந்தை, குருநிந்தை, சிவனடியார் நிந்தை
(2) சிவதோத்திர நிந்தை, பொதுமகளிரை நாடல், உயிர்க்கொலை
(3) பிறர்மனைநாடல், சிவசாத்திர நிந்தை, பலியிடல்
(4) குருநிந்தை, சிவதோத்திர நிந்தை, முதியோரை மதியாமை
(5) சிவனடியார் நிந்தை, சிவசாத்திர நிந்தை, கவர்ச்சியுடன் கோயிலுக்குச் செல்லல்

**25.** நாட்டார் வழக்காற்று வகைமைகளுள் மூன்று சடங்கியல் நிகழ்கலைகள் அடங்கும் தொகுதி
(1) கணியான் கூத்து, காமன் கூத்து, பொன்னர்-சங்கர் கூத்து
(2) காத்தவராயன் கூத்து, நையாண்டி மேளம், நொண்டி நாடகம்
(3) தப்பாட்டம், கோலாட்டம், பறைமேளக்கூத்து
(4) ஒயிலாட்டம், கணியான் கூத்து, தப்பாட்டம்
(5) தேவராட்டம், இராமாயணம், மோகினியாட்டம்

[பக். 4 ஐப் பார்க்க

1818

- **26** தொடக்கம் **30** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் உரிய தலைப்புடன் **பொருந்தாததைத்** தெரிவுசெய்க.

**26.** **இருக்குவேதத்தின் முதன்மை**

(1) இந்திய இலக்கியங்களுள் காலத்தால் முற்பட்ட இலக்கியம் இருக்கு வேதமாகும்.
(2) வைதிக சமயங்களின் வழிபாட்டிற்குரிய தெய்வங்கள் பலவற்றின் இயல்புகளை வெளிப்படையாக முதன்முதலில் குறிப்பிட்ட நூலும் இதுவே.
(3) வேதங்கள் நான்கினுள் முதலில் வைத்துப் போற்றப்படும் வேதம் இருக்கு வேதமேயாகும்.
(4) இருக்கு வேதம் அதர்வவேதம் போன்று பொதுமக்களுக்கு நன்மை தரும் மந்திரங்களையும் தீமை தரும் மந்திரங்களையும் பெரிதும் குறிப்பிடுகின்றது.
(5) ‘ரிதம்’ எனப்பட்ட அண்டவியக்க முறைமைக்கும் படைப்புக்கும் வருணனே முதல்வன் என இவ்வேதம் குறிப்பிடுகின்றது.

**27.** **அருட்பாவின் மேன்மை**

(1) தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் எனும் அருட்பாக்களை கோயில்களிலும் புனிதமான இடங்களிலும் பாடுதல் வேண்டும்.
(2) முக்குணவயத்தோர் பாடல்களும் சினிமாப் பாடல்களும் மருட்பாக்களாகும் என்பர்.
(3) மருட்பாக்களை அருட்பாக்கள் எனக் கருதிப் பாடுவதில் தவறேதுமில்லை.
(4) இறைவனுக்கு மிகுந்த பிரீதி உடைய பாடல்கள் அருட்பாக்களே ஆகும்.
(5) அருட்பாக்களை காதலாகி கசிந்துருகிப் பண்ணோடு பாடுதல் வேண்டும்.

**28.** **வழிபாட்டில் பெண்ணடியார்**

(1) அடியார்கள் அட்டாங்க நமஸ்காரம், தோப்புக்கரணம், பிரதட்டை செய்தும் காவடி எடுத்தும் தீச்சட்டி ஏந்தியும் தோத்திரம் பாடியும் இறைவனை வழிபாடு செய்வர்.
(2) பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரம் செய்ய வேண்டுமென்பது சைவ மரபு.
(3) தலை, கைகள் இரண்டு, முழந்தாள் இரண்டு என்னும் ஐந்து உறுப்புகளும் நிலத்தில் பொருந்தும்படி செய்யப்படும் வழிபாடே பஞ்சாங்க நமஸ்காரம் எனப்படும்.
(4) பெண் அடியார்கள் பிரதட்டை செய்வது அவர்களின் உடலமைப்புக்கு ஒவ்வாத செயலாகும்.
(5) பெண் அடியார்கள் வன்பக்தியில் ஈடுபடுவது சாலச் சிறந்தது.

**29.** **உபநிடதமும் இந்து தத்துவங்களும்**

(1) பிரபஞ்ச உண்மையை விளக்குபவை உபநிடதங்கள் ஆகும்.
(2) ஆன்மாவினதும் இறைவனதும் இருப்பு பற்றி உபநிடதங்கள் எடுத்துக்கூறுகின்றன.
(3) இந்து தத்துவங்கள் உபநிடத மகாவாக்கியங்களுக்கான விளக்கங்களாகும்.
(4) சமண, பௌத்த தத்துவங்கள் உபநிடத சிந்தனைகளின்மேல் கட்டியெழுப்பப்பட்டவை.
(5) இந்துக்களின் வாழ்வியல் சிந்தனைகளை எடுத்துக்கூறும் நூல் உபநிடதமாகும்.

**30.** **உமாபதி சிவாசாரியார்**

(1) இவர் சிவஞானபோதம் என்னும் முதன் நூலுக்குச் சிவப்பிரகாசம் என்னும் வழிநூலை எழுதியவர்.
(2) தில்லைச் சிவனின் திருவருளால் பெற்றான் சாம்பானுக்கு முத்தி கொடுத்தவர்.
(3) சித்தாந்த அட்டகத்தில் அடங்கும் நூல்களை எழுதி சைவசித்தாந்த உருவாக்கத்துக்குப் பணிபுரிந்தவர்.
(4) தில்லைக் கொற்றவன் குடியில் பிறந்தவர். தமிழ், வடமொழிகளில் வல்லவர்.
(5) இவர் திருமுறை கண்டபுராணம், சேக்கிழார் புராணம் முதலான நூல்களையும் எழுதியுள்ளார்.

- மேல்வரும் பகுதியில் தரப்பட்டுள்ள சொற்களுள் இவ்விரண்டு சொற்கள் குறிப்பிட்டவொரு விடயத்தோடு தொடர்புடையவை. அவற்றின் பொருத்தப்பாட்டின் அடிப்படையில் **31** தொடக்கம் **35** வரையுள்ள ஒவ்வொரு வினாவுக்கும் பொருத்தமான சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

| A<br>சுவாஹா | B<br>சுக்கிரநீதி | C<br>கற்றளி | D<br>குமாரத்தன் | E<br>பிரதிபாஷிகம் |
|---|---|---|---|---|
| F<br>சிறுதளி | G<br>செம்பக நாச்சியார் | H<br>விவர்த்தவாதம் | I<br>வஷட் | J<br>அர்த்த சாத்திரம் |

**31.** யாகங்களில் பிதிர்களுக்கு உணவளிக்கும் பொழுது வேட்போர் ஒலிக்கும் மந்திரங்களைக் குறிக்கும் எழுத்துகள்
(1) AI (2) BG (3) CH (4) DF (5) EH

**32.** இந்துக்களின் சமய ஒழுக்காற்றையும் சமூக நீதியையும் ஒழுங்குபடுத்தும் நூல்களைக் குறிக்கும் எழுத்துகள்
(1) AG (2) AI (3) BJ (4) DI (5) EF

**33.** திராவிடக் கட்டடக் கலை அமைப்பை வெளிப்படுத்தி நிற்கும் எழுத்துகள்
(1) AF (2) AJ (3) BG (4) CF (5) CI

[பக். 5 ஐப் பார்க்க

**34.** வேடுவ சமூக வழிபாட்டு தெய்வங்களைக் குறிக்கும் எழுத்துகள்
(1) BF (2) CH (3) DG (4) DI (5) EJ

**35.** வேதாந்தக் கோட்பாடுகளைக் குறிக்கும் எழுத்துகள்
(1) AH (2) BG (3) CF (4) DJ (5) EH

● சைவ சமயத்தின் வளர்ச்சிப் பின்னணிகள் சில கீழே தரப்பட்டுள்ளன. அவற்றை அடிப்படையாகக் கொண்டு **36** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான சேர்மானத்தைத் தெரிவுசெய்க.

**அருட்கவி சீ. வினாசித்தம்பிப் புலவர்**

A - இவர் இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இயக்கவாதி, சமூகத்தொண்டர்.
B - பதிகம், ஊஞ்சல், அந்தாதி, பிள்ளைத்தமிழ், திருப்புகழ் முதலான பல நூற்றுக்கணக்கான பிரபந்தங்களைப் பாடியுள்ளார்.
C - ஸ்ரீ லலிதாம்பிகை சகஸ்ரநாமம் என்னும் வடமொழி நூலை, அன்னை லலிதாம்பிகை பேராயிரம் என்னும் பெயரில் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்.
D - ஸ்ரீ விநாயகபுராண வசன காவியம், கந்தபுராண வசன காவியம் முதலான நூல்களை எழுதியுள்ளார்.
E - இவர் நடிகர், நாடக ஆசிரியர், இசைவல்லுநர், கதாப்பிரசங்கி என்னும் வகையில் பல்துறை சார்ந்த ஆளுமை கொண்ட கலைஞனாக விளங்கியவர்.
F - பலியிடுதல், குறிப்பிட்ட சிலருக்கான ஆலய தரிசனத் தடை, சமபந்தி போசனைத்தடை முதலான சமூக, சமய விரோத நடவடிக்கைகளுக்குத் தமது எதிர்ப்பினைக் காட்டியவர்.

**36.** அருட்கவி வினாசித்தம்பிப் புலவரின் கவித்துவத்திற்கும் எழுத்தாற்றலுக்கும் பொருத்தமான சேர்மானம்
(1) AC (2) BD (3) BE (4) CF (5) DF

**37.** அவரின் கலைத்துவத்தையும் சமூக சமய நோக்கினையும் விளக்கும் பொருத்தமான சேர்மானம்
(1) AD (2) BC (3) BD (4) CE (5) EF

**38.** புலவர் பற்றிய மதிப்பீட்டிற்கும் அவரின் பன்மொழிப் புலமைக்கும் பொருத்தமான சேர்மானம்
(1) AC (2) AF (3) BE (4) CD (5) CF

**தஞ்சைப் பெருங்கோயில்**

A - சோழர்கால கட்டடக்கலையின் உன்னத படைப்பாக அமைவது தஞ்சைப் பெருங்கோயிலாகும்.
B - இக்கோயில் 500 அடி நீளமும் 250 அடி அகலமும் கொண்டது.
C - தென்திசைமேரு, பெரிய கோயில், பெருவுடையார் கோயில் என்பன இதன் சிறப்புப் பெயர்களாகும்.
D - இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் முதலான ஆறு பகுதிகளைக் கொண்டது.
E - சோழர்களின் பல்துறை சார்ந்த வெற்றியின் குறியீடாக அமைவதே இக்கோயிலாகும்.
F - இக்கோயிலின் விமானம் 216 அடி உயரத்தைக் கொண்டது.

**39.** சோழர்காலக் கட்டடக்கலையின் சிறப்புக்கும் சாதனைக்கும் சான்றாக அமையும் சேர்மானம்
(1) ABD (2) ACE (3) BCD (4) CDE (5) DEF

**40.** தஞ்சைப் பெருங்கோயிலின் அமைப்புக்களைக் குறிக்கும் சேர்மானம்
(1) ADE (2) AEF (3) BDF (4) CDE (5) DEF

● **41** தொடக்கம் **50** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் ஐந்து விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் தலைப்புக்கு மிகப்பொருத்தமானதைத் தெரிவுசெய்க.

**41.** **மாயையும் சித்தாந்தமும்**
(1) வைதிக தத்துவங்கள் பலவும் மாயை என்னும் தத்துவத்தை ஏற்றுக்கொள்கின்றன.
(2) சாங்கியம், வேதாந்தம், சைவசித்தாந்தம் முதலியன மாயை பற்றி அதிகம் பேசும் தத்துவங்களாகும்.
(3) மாயை வெறும் தோற்றமே, அது உண்மைப்பொருள் அல்ல என்பர் அத்வைதிகள்.
(4) சாங்கியம் புருஷனின் செயலுக்காக இருபத்து நான்கு தத்துவங்களைக் குறிப்பிடும்.
(5) உலகின் இருப்பு, ஆன்மாவின் நடத்தை என்பவற்றுக்கு அடிப்படையாக அமைவது மாயையே என்பர் சித்தாந்திகள்.

**42.** **அத்வைத வேதாந்தத்தின் பிதாமகர்**
(1) அஜாத வாதத்தைத் தோற்றுவித்தவர் கௌடபாதர் என்பர்.
(2) அவர் காரண காரியத்தொடர்பு பொருளற்றது என்பார்.
(3) கௌடபாதர் ஆன்மா ஒன்றே உண்மைப் பொருள் என்பார்.
(4) அஜாத வாதத்தின் மேலே கட்டியெழுப்பப்பட்டதே சங்கரரின் வேதாந்தமாகும்.
(5) உலகம் இருப்பதுமில்லை, உருவாக்கப்படுவதுமில்லை, அது பொய் என்பார்.

[பக். 6 ஐப் பார்க்க

**43. ஆகம சிற்பசாத்திர வழிபாட்டு மரபு**

(1) சைவர்கள் இறைவனை நாட்டார் வழிபாட்டு மரபு சார்ந்தும் ஆகம நெறி சார்ந்தும் வழிபடுகின்றனர்.
(2) ஆலயம் சிற்பசாத்திர நெறிமுறைகளுக்கமைவாகக் கட்டப்படுகின்றது.
(3) ஆலய வழிபாடு ஆகம, சிற்ப சாத்திர மரபுக்கு அமைவாகவே நடைபெறுகின்றது.
(4) ஆகமங்கள் கூறும் கலைமரபு அவற்றின் பொருள் மரபின் ஒரு பகுதியேயாகும்.
(5) ஆலய வழிபாடு ஆகமம் சார்ந்து நடைபெறுவது.

**44. சைவசித்தாந்தத்தின் தோற்றமும் உருவாக்கமும்**

(1) சைவசித்தாந்தத்தின் தோற்றுவாயை பரிபாடல், திருமுருகாற்றுப்படை முதலான சங்க இலக்கியங்களில் காணலாம்.
(2) தேவார திருவாசகங்களில் சைவசித்தாந்தக் கருத்துகளை வெளிப்படையாகக் காணலாம்.
(3) பல்லவர்காலப் பக்தி இயக்கமும் சோழர்கால சைவ சமய எழுச்சியும் அவைதீக, வேதாந்தக் கோட்பாடுகளை வலுவிழக்கச் செய்தன.
(4) சோழர் காலத்திலே சைவசித்தாந்திகள் பரவலாகக் காணப்பட்ட சித்தாந்தக் கருத்துக்களைத் தொகுத்து சைவசித்தாந்தத் தத்துவமாக வெளிக்கொணர்ந்தனர்.
(5) சைவசித்தாந்தம் நிறுவும் இறையியல் இருப்பும், வாழ்வியல் முறைமையும் சைவப் பெருங்கோயில்கள் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைந்தன.

**45. திருப்படைக்கோயில்**

(1) புராதன காலம் முதல் மன்னர்களும் பொதுமக்களும் ஆலயங்களுக்குத் தானம் அளித்து வந்தனர்.
(2) இத்தானம் நிபந்தம் எனவும் மானியம் எனவும் அழைக்கப்பட்டது.
(3) ஈழநாட்டிலே ஆலயங்களுக்கு வழங்கப்பட்ட மானியங்கள் திருப்படை, தேசத்து என அழைக்கப்பட்டன.
(4) திருப்படைகளை பெருமளவு பெறும் கோயில்கள் திருப்படைக் கோயில்கள் என அழைக்கப்பட்டன.
(5) திருக்கோயில் சித்திர வேலாயுதர் கோயில் திருப்படைக் கோயில்களில் ஒன்றாகும்.

**46. வழிபடும் மொழி**

(1) இறைவன் என்றும் உள்ளவன், எல்லாம் அறிபவன், எல்லாம் வல்லவன்.
(2) இறைவனைப் போற்றுவதற்குரிய மொழி தேவ பாடையாம் சமஸ்கிருதமேயாகும்.
(3) இறைவனைப் போற்றுவதற்குரிய மொழி இறைவனுக்குப் பிரீதியுடைய தமிழ் மொழியேயாகும்.
(4) இறைவனை ஏற்றிப் போற்றுவதற்குரிய மொழி அவர்தம் தாய்மொழியேயாகும்.
(5) இறைவனைப் போற்றி வழிபடுவதற்கு குறிப்பிட்டதொரு மொழி உரிமையுடையதன்று.

**47. காவடியும் பக்தியும்**

(1) இறைவனை வழிபடுவதற்குரிய வழிபாட்டு முறைகளுள் காவடியுமொன்றாகும்.
(2) காவடி, முருகனுக்குப் பிடித்த ஆடற்கலைகளுளொன்று என்பர்.
(3) ஆன்மீக நாட்டத்தையும் பக்தி வைராக்கியத்தையும் வளர்க்கும் சாதனங்களுள் காவடியும் ஒன்றாகும்.
(4) காவடி வன்பக்தியையும் மென்பக்தியையும் வெளிப்படுத்துவது.
(5) பால் காவடி மென்பக்திக்கும் பறவைக்காவடி வன்பக்திக்கும் எடுத்துக்காட்டுகளாகும்.

**48. திருவிழாவும் நடத்தை மாற்றமும்**

(1) திருவிழாவும் விழாவும் ஒரு பொருட் சொற்கள் அல்ல.
(2) இறைவனைப் பற்றிச் சிந்திப்பதற்கோர் இடமாகத் திகழ்வது திருவிழாவாகும்.
(3) பெரும்பாலும் விழாக்கள் இன்பம் தரும் நிகழ்வுகளை இசைவாக்கத்துடன் நிகழ்த்துவனவாகும்.
(4) பக்தனை அவ்வப்பொழுது புறவுலகியல் வாழ்க்கையினின்று விடுபடச் செய்து தெய்வீக பலத்தைப் பெற வழிகாட்டுவதும் திருவிழாவேயாகும்.
(5) பக்தன் தூய்மை, பக்தி, பலம் முதலானவற்றைப் பெறுவதோடு விட்டுக்கொடுத்தல், கூட்டுறவு முதலான சமூகப் பொறுப்புக்களையும் பெற்றுக் கொள்ளவும் திருவிழா இடமளிக்கின்றது.

**49. அவத்தையும் ஆணவமும்**

(1) வேதாந்தம் சீவாத்துமாவின் இன்ப துன்பங்களுக்கு அடிப்படைக் காரணம் அவத்தையே எனக் குறிப்பிடுகிறது.
(2) சைவசித்தாந்தம் ஆன்மாவின் வினைப்பயன்களுக்கு அடிப்படையாக அமைவது ஆணவமே என்கிறது.
(3) வேதாந்திகள் சீவாத்துமாக்களின் ஆன்ம விடுதலைக்குத் தடையாக இருப்பது அவத்தையே என்பர்.
(4) சித்தாந்திகள் ஆணவம் ஆன்மாவோடு அத்துவிதப்பட்டிருப்பது ஆன்மாவின் விடுதலைக்குத் தடையென்பர்.
(5) வேதாந்த, சித்தாந்த கொள்கைகளின் அடிப்படையில் அவத்தையும் ஆணவமும் பெரிதும் ஒத்திருக்கும்.

**50. பதிகமும் திருவருட்பேறும்**

(1) பத்துப் பாடல்களைக் கொண்டது பதிகமாகும்.
(2) காப்பிய இலக்கணங்களின் மிகச் சுருங்கிய பொருள் மரபு கொண்ட இலக்கிய வடிவமே பதிகமாகும்.
(3) பதிகம், பல்லவர் காலத்தில் எழுந்த பிரபந்த வடிவங்களுள் மிகவும் பக்தி பூர்வமான இலக்கிய வடிவமாகும்.
(4) பதிகம் இறைவன் திருவருட்பேற்றுக்குப் பக்தனை ஆற்றுப்படுத்த வல்லது.
(5) இறை புகழைச் சிறந்த முறையில் போற்றிக் கூறுவன பதிகங்களாகும்.

* * *

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

හින්දු ධර්මය II
இந்து சமயம் II
Hinduism II

42 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள்:**

※ பகுதி I இல் இரண்டு வினாக்களையும், பகுதி II இல் மூன்று வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக ஐந்து வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

## பகுதி I

1. "சிந்துவெளியிலே கண்டெடுக்கப்பட்ட தொல்பொருட் சான்றுகள் வெளிப்படுத்தி நிற்கும் இந்து சமயச் சார்புடைய கருத்துக்கள் ஊகங்கள் என்பதைக் காட்டிலும் அவை இந்து சமய நம்பிக்கைகளை உறுதிப்படுத்துவனவாயுள்ளன."
   (அ) சிந்துவெளியின் காலத்தையும் அதன் பிரதான நகரங்களையும் குறிப்பிடுக.
   (ஆ) சிந்துவெளியிலே கண்டெடுக்கப்பட்ட தொல்பொருட் சின்னங்களெனக் கருதப்படுவனவற்றைப் பட்டியலிடுக.
   (இ) சிந்துவெளி தொல்பொருட் சின்னங்கள் வெளிப்படுத்தி நிற்கும் சமயச் சார்புடைய கருத்துக்களை எடுத்துக்கூறுக.
   (ஈ) மேற்கூறிய கூற்றினை நீர் ஏற்றுக் கொள்கின்றீரா? காரணம் தருக.

2. "பொதுமக்களின் வாழ்வியல் முறைமைகளை வெளிப்படையாகக் கூறுவதோடு தனக்கெனத் தனித்துவத்தையும் கொண்டுள்ள வேதம் அதர்வவேதமாகும்."
   (அ) அதர்வவேதம் என்பதன் பொருள் என்ன?
   (ஆ) அதர்வவேதத்தின் அமைப்பைச் சுருக்கமாக விளக்குக.
   (இ) இவ்வேதம் எடுத்துக்கூறும் பொதுமக்கள் வாழ்வியல் சடங்குகளின் பிரதான அம்சங்களைக் குறிப்பிட்டு, அவற்றைச் சுருக்கமாக விளக்குக.
   (ஈ) அதர்வவேதத்தின் தனித்துவத்தினை எடுத்துக்கூறுக.

3. "இந்து தத்துவங்களுக்கு முன்னோடியாக அமையும் தத்துவம் சாங்கிய தத்துவமேயாகும்."
   (அ) சாங்கியத்தின் காலத்தையும் அதன் பிரதான நூல்களையும் குறிப்பிடுக.
   (ஆ) சாங்கியம் ஏற்றுக்கொள்ளும் பிரமாணங்கள் யாவை?
   (இ) சாங்கிய தத்துவக் கோட்பாடுகளைச் சுருக்கமாகக் குறிப்பிடுக.
   (ஈ) சாங்கியக் கோட்பாடுகள் பின்வந்த வேதாந்த, சித்தாந்த தத்துவங்களுக்கு முன்னோடியாக அமைந்தவாற்றைச் சுருக்கமாக விளக்குக.

## பகுதி II

4. சைவசித்தாந்த உருவாக்கத்தில் மெய்கண்டாரின் பங்கினை மேல்வருவனவற்றின் அடிப்படையில் ஆராய்க.
   (அ) காலமும் சூழ்நிலையும்
   (ஆ) மெய்கண்டாரின் வாழ்க்கை வரலாற்றுச் சுருக்கம்
   (இ) மெய்கண்டாருக்கு முற்பட்ட தமிழகத்தில் இந்து தத்துவ சிந்தனைகளின் தாக்கம்
   (ஈ) சைவசித்தாந்த உருவாக்கத்தில் மெய்கண்டாரின் பங்கு

5. மேல்வரும் சமய நிறுவனங்களுள் ஒன்றினைத் தெரிந்து, அது ஈழ நாட்டில் சைவசமய வளர்ச்சியின் பொருட்டு ஆற்றும் தொண்டினை மதிப்பிடுக.
   (அ) யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை
   (ஆ) திருநெல்வேலி சைவ வித்தியாவிருத்திச் சங்கம்
   (இ) அகில இலங்கை இந்து மாமன்றம்

6. திராவிட கோயிற் கட்டடக்கலை வளர்ச்சியில் பல்லவர் கட்டடக்கலை பெறும் முக்கியத்துவத்தினை ஆராய்க.

[பக். 2 ஐப் பார்க்க

**7.** "சமயச் சடங்குகள் புனிதம் வாய்ந்தவையாகவும் பக்தியை வளர்க்கும் சாதனமாகவும் அமைகின்றன. அவற்றுள் விரதங்கள் முக்கிய இடத்தை வகிக்கின்றன."

(அ) விரதம் என்பதன் பொருளை வரையறுக்குக.

(ஆ) சிவ விரதங்களின் வகைகளைக் குறிப்பிடுக.

(இ) நீர் மேலே குறிப்பிட்ட சிவ விரதங்களுள் ஒன்றினை அநுட்டிக்கும் முறை பற்றி விளக்குக.

(ஈ) நீர் அநுட்டிக்கும் விரதமொன்றின் மூலம் நீர் பெறும் அநுபவம் பற்றி விபரிக்குக.

**8.** மேல்வருவனவற்றுள் எவையேனும் **நான்கினுக்குச்** சிறுகுறிப்பு எழுதுக.

(அ) மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம்

(ஆ) பஞ்சாங்கம்

(இ) தைப்பூசம்

(ஈ) நாகதம்பிரான் வழிபாடு

(உ) விபுலாநந்த அடிகள்

(ஊ) திருமணச் சடங்கு



* * *